உ

சிவமயம்.

---

இஃது

சிவஞானபுரம்

ஸ்ரீலஸ்ரீ இலக்கணமுத்துக்கவிராஜ பண்டிதரென்னும்

நித்தியானந்த சுவாமிகள் பரிபூரணகாலத்தில்

ஸ்ரீலஸ்ரீ ஆத்துமாநந்தசுவாமிகள் இயற்றிய

# சரமகவியும்,

---

ஷை நித்தியானந்தசுவாமிகள் மாணாக்கரும்

தூத்துக்குடி.

சற்சனசபையின் உப அக்கிராசனாதிபதியுமாகிய

ஒட்டநத்தம் மகா-௱-௱-ஸ்ரீ

ஜெகவீரபாண்டியக கவிராஜரவர்கள் இயற்றிய

# பிரிவாற்றுமைத் தோத்திரப்பதிகமும்.

---

தூத்துக்குடி பஞ்சவர்த்தகம் மகா-௱-௱-ஸ்ரீ

லெ. சு. லெக்குரெட்டியாரவர்கள்

பொருளுதவிகொண்டு வெளியிடப்பட்டது.

---

N. சிவகுருநாதபிள்ளையால்,

தூத்துக்குடி:

சைவப்பிரகாச அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

---

1912

சிவமயம்.

---

## சரமகவி.

### ஆசிரிய விருத்தம்.

---

சீரியதனுள்ளத்தமைந்தசங்கற்பமது
சிவமேயெனைப்புரந்தான்
திருவடியிணாந்தமிழவில்லைபெனலது
தெரிப்பவைகாசிதனிலுங்
காரிகைமகாரிரணியங்களைவிடுத்தவியல்
காணமுக்கோணாளிலுங்
சமூலரியவுட்பகைகளாறுங்கழன்றமைதி
கழவபரசஸ்டி தனிலும்
பாரிலுறுபொருடிரிபிலாதறியுங்டுவனெனல்
பார்ப்பவருபுந்திதனிலும்
பரஞானிதானெனல்விளங்கவளர்சிவஞான
பதியினுமெமெயொருவிமூலங்
காரியமிறந்துளசிவானந்தவாழ்விற்
கலந்திருக்கின்றனனிலக
கணமுத்தவுத்தமவொழுக்கருணைநிறைந்துதன்
கடலெனவிளங்கினோனே.





உ

சிவமயம்.

# பிரிவாற்றாமைத் தோத்திரப்பதிகம்

திருச்சிற்றம்பலம்.

ஆதரவாய்க்கற்பித்தருளலெங்கே
　யையாவென்றெனைப்பழக்குமருமையெங்கே
கோதகலப்புகறருநன்மொழிகளெங்கே
　கொவ்வையெனக்கனிந்ததிருமணிவாயெங்கே
பூதரம்போலசையாதபுலமையெங்கே
　பொய்யாமைமுதலாயகுணங்களெங்கே
யாதிபரனடிமலர்க்கேயுள்ளந்தந்த
　வையனேயிலக்கணமுத்தறிஞர்வேந்தே. (1)

சங்கையுடன்வந்தார்க்குச்சங்கைநீங்கத்
　தருமொழியாலிடங்காலநோக்கிச்சாற்றி
யங்கவரையுபசரிக்குமாண்மையெங்கே
　யன்பெங்கேயடக்கமெங்கேயருடானெங்கே
துங்கமறையாகமநூல்வழியேசென்ற [போற்று
　தூய்மையெங்கேவாய்மையெங்கேதொண்டர்
மங்கையற்கண்ணம்பிகைமன்பாதமுற்ற
　வையனேயிலக்கணமுத்தறிஞர்வேந்தே, (2)

சிவனடியார்தமைக்கண்டாற்சிவனேயென்று
சிந்தையின்மெய்ப்பத்திகொண்டுசெங்கைகூப்பி
நவமாயநல்விருந்தேவருகவென்று
நயமுரைக்குநண்பெங்கேகேட்டோர்தம்மைத்
தவமுடையராயிருமினென்றுசாற்றுஞ்
சதுரெங்கேதகையெங்கேதமியனேனை
யவனெனைதபவெனுமஞ்சொலெங்கே
யையனேயிலக்கணமுத்தறிஞர்வேந்தே. (3)

மலர்தலைமாநிலமுழுதும்புகழ்வாழ்ந்தோம்
வானுலகும்புகழ்ந்திடநாம்வாழ்வோமென்றே
பலகலைகண்முழுதுணர்ந்தபுலவரிக்குப்
பார்ப்பதரிதானுமாண்புமிக்க
நலமுடையராயிருக்கலரிதென்றெண்ணி
நான்முகன்றனுலகுற்றநகப்போமென்றே
வலகிலாவன்பர்குழாநீத்தெழுந்தா
யையனேயிலக்கணமுத்தறிஞர்வேந்தே. (4)

கல்லாதபுல்லியருமோர்காலின்னைக்
கண்டாரேலவர்புன்மைமுழுதுஞ்செந்தீ
புல்லாதவன்கதிரான்முற்றக்காய்ந்த
புன்சருகாமொழிசிறிதுபுகலக்கேட்பி
னில்லாதகாயமிதைநிலையென்றெண்ணி
நீள்பிறவிப்புணரிதனைநீந்தாநிற்பர்
அல்லாருங்குழலுமைகோன்பாதத்துற்ற
வையனேயிலக்கணமுத்தறிஞர்வேந்தே. (5)

வானுலகத்தவருன்னையெதிர்கொண்டேத்தி
வருகவிங்குவருகவெனவாழ்த்தினரோ
தேனொழுகுதுழாயலங்கற்செங்கண்மாலுந்
திசைமுகனுஞ்சிந்தையுவந்தன்புகொண்டு
கானுலவுகொன்றையணிவேணிநாதர்
கழல்கண்டோயெமக்குமவைகாட்டாயென்றே
யானபரிவோடழைத்தவ்வுலகுற்றாரோ
வையனேயிலக்கணமுத்தறிஞர்வேந்தே. (6)

சிவஞானபுரமென்னும்பெயருக்கேற்பச்
சிவஞானமெப்பொழுதுந்திகழச்செய்து
பவஞானந்தனையகற்றிப்பதிஞானத்தைப்
பத்தியுடனடைந்தோர்க்குப்பரிந்துசாற்றுந்
தவஞானப்பெருங்கடலேவாய்மையன்பு
சாந்தமுதற்குணங்களெனுமலர்கள்பூத்தென்
னவஞானந்தொலைத்தொளிர்பூந்தருவேயெந்த
மையனேயிலககணமுததறிஞர்வேநதே. (7)

குண்டைமதியிரெட்டேழோணம்புந்தி
குலவியநாளிருபதுநாழிகைநேரத்திற்
றொண்டர்குழாமபுடைபரந்துதுதிகள்கூறத்
துயரங்கள்பலர்கூரத்தோடமிந்த
யண்டலமீதிருப்பதினிமேலென்றெண்ணி
மாலயனுமறைமுடியுமின்னுங்காணா
வண்டர்பிரான்றிருப்பாதமிருப்பாக்கொண்டா
யையனேயிலககணமுத்தறிஞர்வேந்தே. (8)

[illegible]டுமூன்றுங்கூடி
[illegible]யெத்துணையத்துணையிலிந்த
விரிபோதைநெடுங்கடல்சூழவனிவாழ்வை
வெறுத்தமலானந்தமிகுவாழ்வைவேண்டிப்
பரிதாபிவருடமதிலீரைஞ்ஞூற்றுப்
பத்தெட்டேழாண்டமரபக்கமாறி
லரியேனமாய்க்காணுவடியுற்றாயோ
லையனேயிலக்கணமுத்தறிஞர்வேந்தே. (9)

காலையுச்சிமாலையிந்தமூன்றுகாலுங்
கைபூசிமுகம்பூசிக்கங்கைதம்பை
மாலையணிவேணிமுடிவரதன்மெய்ம்மை
மாறாதவெண்ணீற்றைமலர்க்கைதாங்கிச்
சீலமுடன்விதியோடுகுழைத்துமூன்று
தீகுணங்கடமைவென்றேமென்றுதீட்டும்
ஆலியெனுங்குறியினியானென்றுகாண்பே
னையனேயிலக்கணமுத்தறிஞர்வேந்தே. (10)

திருமுகமியான்றெரிசிக்கப்பெறுமலந்தோ
சிந்தைமிகநொந்தயர்ந்தேன்றேசிகாநின்
பொருவிலருட்கழகாமோபோந்தெனக்கோர்
பொய்யாதமொழிபுகன்றாறபோகுண்டாமோ
ஒருமுகப்பாகினிவருந்தாவண்ணங்காத்துக்
கடைபேணியாண்டருளக்கதிவேலண்ணால்
மருமலர்செபமலரடியென்னுள்ளம்வைக்கும
வனப்புரிந்தகவிவேந்தாவேந்தேவாழி.

---